# பகவத் பாதை

## BAGAVATH PATHAI

தமிழ் மாத இதழ்

மலர் 4 | இதழ்: 3 | மே 2017 | வருடச் சந்தா ரூ. 100/- Volume : 4 | Issue: 3 | May 2017 | Annual Subscription Rs. 100/-

## ஏற்காடு ஞான முகாம்



## தன்னம்பிக்கை





"ஆர்வம்" என்ற போர்வையில் உணர்ச்சிகள் அனைத்தும் நம்மை ஏமாற்றிவிடும். தன்னம்பிக்கை, அவநம்பிக்கை ஆகிய அனைத்துமே இந்த வகையைச் சேர்ந்தவைதான். அது தன்னம்பிக்கையாக இருந்தாலும்சரி, அவநம்பிக்கையாக இருந்தாலும் சரி, இரண்டையுமே புறந்தள்ளி விட்டு செய்ய வேண்டிய செயல்களுக்கு மட்டும் முக்கியத்துவம் கொடுப்பதே நாம் செயலைப் புரிந்து கொள்வதாகும். இதுவே நாம் செயலை எதிர்கொள்வதற்கான வழி.

- ஸ்ரீ பகவத்

# பகவத் பாதை

தமிழ் மாத இதழ்

## உள்ளே





## சிந்தனையும் சிந்திப்பும்

### – புதிய நூல்

மனம் என்னும் மர்ம முடிச்சுகள் நிறைந்த பூட்டைத் திறக்கும் மிகச்சிறிய சாவிதான் இந்நூல். இமயமலையைப் போன்றிருக்கும் நமது பிரச்சினைகளுக்கெல்லாம் இப்படியும் ஒரு தீர்வு இருக்க முடியுமா என ஆச்சரியபட வைக்கும் நூல்.

இலட்சக்கணக்கானோரின் இதயப் புண்களைக் குணமாக்கி அவர்களையெல்லாம் மீட்டுக் கொடுத்த இந்நூல் மேலும் பலருக்கு பயன்பட வேண்டுமென்ற நோக்கில் பரிசில் விலையில் ரூ.10க்கு 5000 பிரதி வெளிவர இருக்கிறது.

இந்நூலை பரிசில் விலையில் வெளியிட ரூ.10000 வழங்கும் ஐந்து நன்கொடையாளர்கள் தேவைப்படுகின்ற நிலையில்....

1. திரு. **மோகன்ராம்,** சென்னை
2. திரு. **தனசேகரன்,** ஆரணி, திருவண்ணாமலை

ஆகிய இரு அன்பர்கள் நன்கொடை வழங்கியிருக்கிறார்கள். அவர்களுக்கு ஸ்ரீ பகவத் மிஷன் சார்பில் உளமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

மேலும் மூன்று நன்கொடையாளர்கள் தேவைபடுகிறார்கள். வாய்ப்புள்ளவர்கள் தங்களை இணைத்துக் கொள்ளுமாறு அன்புடன் அழைக்கின்றோம்.

ஸ்ரீ பகவத் மிஷன்,
சேலம்.

கூடுதல் தகவல்களைப் பெற விரும்புகிறீர்களா? அல்லது பாதையை நண்பர்களுக்கு அனுப்ப விரும்புகிறீர்களா?




Sri Bagavath Mission


31, Ramalingasamy Street, Ammapet,
Salem - 636 003. Tamilnadu,INDIA.
**V. A. P. Sharavanan : 99942 05880**
**Dr. N. Kailasam : 94432 90559**
**K. S. Jeevamani : 97891 65555**
www.pravaagam.org, www.sribagavath.org
E-mail : sribagavathmission@gmail.com


## பகவத் பாதை சந்தா விபரம்

பகவத் பாதை மாத இதழுக்கு சந்தா செலுத்தாதவர்கள், அல்லது புதுப்பிக்காதவர்கள் கீழ்க்கண்ட ஏதேனும் ஒரு வகையில் சந்தா செலுத்துமாறு அன்புடன் கேட்டுக் கொள்கிறோம். சந்தா செலுத்த விரும்புபவர்கள் கீழ்க்காணும் ஏதேனும் ஒரு வழியில் செலுத்தலாம்.

**ஓர் ஆண்டு சந்தா – ரூ.100/–** **ஐந்தாண்டு சந்தா – ரூ. 500/–**
**ஆயுள் சந்தா – ரூ, 1000/–**

சந்தாத் தொகையை **"Sri Bagavath Mission"** என்ற பெயரில் **M.O.** அல்லது சேலத்தில் செல்லத்தக்க **D.D. (or) Cheque** மூலம் அனுப்பலாம்.

**www.pravaagam.org** என்ற இணைய தளத்தில் **Credit Card / Debit Card** மூலமாகவும் சந்தா செலுத்தலாம்.

வங்கிக் கணக்கில் நேரடியாக செலுத்துபவர்கள் **HDFC Bank- Sri Bagavath Mission A/c No. 15907620000075, NEFT IFSC: HDFC 0001590** என்ற கணக்கில் செலுத்தலாம்.

**Bank A/C** ல் நேரடியாக செலுத்தியவர்கள் உங்கள் முகவரியை **92620 61838** என்ற எண்ணிற்கு **SMS** மூலம் தகவல் தெரிவிக்க வேண்டுகிறோம்.


This Book Designed By:
**PRAKASH PRINTERS, SALEM**
Mobile : 9843786655



# தன்னம்பிக்கை



தன்னம்பிக்கை சம்பந்தமான உங்களுடைய கருத்து என்ன என அம்மையார் ஒருவர் கேட்டிருந்தார்.

தன்னம்பிக்கை என்றால் என்ன?

உங்களிடம் புதிதாக ஒரு வேலை ஒப்படைக்கப்பட்டிருப்பதாக வைத்துக் கொள்வோம். அந்த வேலையை இதுவரை நீங்கள் செய்த அனுபவம் கிடையாது. ஆனாலும் அதனை உங்களால் வெற்றிகரமாக நிறைவேற்ற முடியும் என்றும் அதனைச் செய்து முடிக்கும் சாமர்த்தியம் உங்களிடம் இருக்கிறது என்றும் உங்களை நீங்களே நம்புவது தான் தன்னம்பிக்கை.

அப்படி இல்லாமல், அனுபவம் இல்லாத வேலையை என்னால் எப்படிச் செய்து முடிக்க முடியும் என்று உங்களுடைய திறமையின் மீது நம்பிக்கை கொள்ளாதிருப்பது அவ நம்பிக்கையாகும்.

பஸ் டிரைவருக்கான வழக்கொன்றில் ஆஜராகி அவருக்காக வழக்கை நடத்தியது நினைவுக்கு வருகிறது.

ரோட்டில் நடந்து சென்ற பெண் ஒருவர் மீது பஸ்ஸினால் நேருக்கு நேராக மோதி காயத்தை ஏற்படுத்தியதாக அவர் மீது வழக்கு.

நேராக ஓட்டிச் சென்று அவர் மோதவில்லை. பஸ்ஸின் பின் வாசலில் தொங்கியபடி பயணம் செய்த எவரோ இடித்ததால் கீழே விழுந்து அவருக்குக் காயம் ஏற்பட்டுள்ளது என்பது குற்றம் சுமத்தப்பட்ட பஸ் டிரைவரின் வாதம்.

சாட்சி விசாரணைகள் நடைபெற்று வந்தன. குறுக்கு விசாரனையில் ஏற்பட்ட சாட்சியங்கள் டிரைவரின் கூற்றுக்கு ஓரளவு சாதகமாக அமைந்திருந்தன. டிரைவருக்கு வழக்கிலிருந்து விடுதலை வாங்கிக் கொடுத்து விடலாம் என்ற நம்பிக்கை ஏற்பட்டது.

அந்நிலையில் அதே டிரைவர் இன்னுமொரு வாகனத்தின் மீது பஸ்ஸை மோதி வாகனங்களுக்குச் சேதமும் பயணிகளுக்குக் காயமும் ஏற்படுத்தியதாக புதியதொரு வழக்கில் குற்றவாளியாக அதே நீதிபதி முன்பு ஆஜர் செய்யப்பட்டார்.

அவருடைய இரண்டாவது வழக்கிற்கும் அவர் என்னையே நம்பி என்னிடம் வழக்கை ஒப்படைத்தார். அது அவருடைய தன்னம்பிக்கை.

ஆனால் அந்த வழக்கை எடுத்துக் கொள்ள எனக்குதான் பயமாக இருந்தது. இரண்டாவது வழக்கு என்ன தன்மையில் உள்ளது என்பதே எனக்குத் தெரியாது. ஒரே டிரைவர் மீது இரண்டு வழக்குகள் இருந்தால் நமக்கு அவர் மீது என்ன எண்ணம் தோன்றும்? நீதிபதிதான் என்ன எண்ணுவார்? எனக்குமே அந்த டிரைவர் மீது அவநம்பிக்கைதான் ஏற்பட்டது. உண்மையில் அவர் மீதுதான் குற்றம் இருக்குமோ என்ற எண்ணந்தான் ஏற்பட்டது. இரண்டு வழக்குகளிலுமே அவர் குற்றவாளியாகக் கருதப்பட்டுத் தண்டிக்கப்பட்டு விடுவார் என்று தான் தோன்றியது.

இரண்டாவது வழக்கும் விசாரணைக்கு எடுக்கப்பட்டது. அப்போதுதான் புதிய வழக்கு விபரத்தைத் தெரிந்து கொள்ள முற்பட்டேன். வழக்கைப் படித்துப் பார்த்த பிறகு தான் வழக்கு மீதும் நம்பிக்கை ஏற்பட்டது; டிரைவர் மீதும் நம்பிக்கை ஏற்பட்டது.

உண்மையில் போலீஸ் வாகனம் ஒன்று இவரது பஸ்ஸில் மோதி பயணிகளுக்கும் காயத்தை ஏற்படுத்தி விட்டது. காயம்பட்டவர்கள் மருத்துவமனை சென்றதால் வழக்குப் பதிவு செய்ய நேர்ந்து விட்டது. இவர் போலிஸ் வாகனத்தின் மீது மோதியதாக வழக்கை மாற்றிப் போட்டு விட்டார்கள். விசாரணைக்குப் பிறகு இரண்டு வழக்குகளிலுமே டிரைவருக்கு சாதகமான தீர்ப்பு

கிடைத்தது.

தன்னம்பிக்கை என்பது என்ன?

ஒரு வேலையை நாம் கையில் எடுத்துக் கொள்ளும்போதே அதை நம்மால் வெற்றிகரமாக முடிக்க முடியும் என்று நம்புவதுதான் தன்னம்பிக்கையா?

அல்லது அந்த வேலையைப் பற்றியும், நமது தகுதியைப் பற்றியும் ஓரளவு தெரிந்து கொண்டு நம் மீது நம்பிக்கை கொள்வதுதான் தன்னம்பிக்கையா?

நான் பள்ளி மாணவனாக ஒன்பதாவது வகுப்பு படிக்கும் போது நடந்த ஒரு நிகழ்வும் நினைவுக்கு வருகிறது. என்னுடன் படித்த மாணவன் அவன், கணக்கு ஆசிரியர் வகுப்பறையில் சில கணக்குகளைப் போடச் சொல்லி டிக்டேசன் கொடுப்பார்.

அவர் கணக்கை சொல்லச் சொல்ல அந்தக் கணக்கை நாங்கள் எங்களது நோட்டுகளில் எழுதிக் கொள்வோம். பிறகு அந்தக் கணக்கைப் பொறுமையாகப் போட்டு ஆசிரியரிடம் காட்டுவோம்.

ஆனால் அந்த மாணவனோ, அவ்வாறு டிக்டேசன் கொடுக்கும்போது அந்தக் கணக்கைத் தனது நோட்டில் எழுத மாட்டான். மாறாக அவன் நேரடியாகக் கணக்கையே போட்டு விடுவான்.

ஆசிரியர் டிக்டேசன் போட்டு முடித்த அடுத்த வினாடியே அவன் நோட்டை எடுத்துக் கொண்டு ஆசிரியரிடம் ஓடுவான். கணக்கைப் போட்டு முடித்து விட்டதாகக் காட்டுவான். அவனுக்குத் தன் மீது அவ்வளவு தன்னம்பிக்கை.

எங்களில் பலர் டிக்டேசன் போட்ட அந்த கணக்கை எப்படிச் செய்யலாம் என்று அந்தக் கணக்கைதான் படித்துக் கொண்டிருப்போம். ஆனால் அவனோ டிக்டேசன் கொடுக்கும் போதே கணக்கையும் போட்டு முடித்து விடுவான்.

அவன் புத்திசாலிதான். ஆனாலும் அவன் பெரும்பாலும் அந்தக் கணக்கை அவசரமாகப் போட்டு எங்கேயாவது கோட்டை விட்டிருப்பான்.

அதனால் அவன் ஆசிரியரிடம் நோட்டைக் கொடுக்கும் போதே அவர் அவனை அடிப்பதற்காக ஒரு கையை உயர்த்தியே வைத்திருப்பார். அவர் எதிர்பார்த்த படியே அவன் எங்கேயாவது கோட்டை விட்டிருப்பான். ஆசிரியரும் அவனுக்கு இரண்டு அறை விட்டு அவனை விரட்டி விடுவார்.

ஆனால் அவனோ, ஆசிரியர் கொடுத்த அறையை சட்டை செய்ய மாட்டான். நோட்டைத் தூக்கிக் கொண்டு தனது இருக்கையை நோக்கி நடந்து வருபவன் அப்படி நடந்து வரும்போதே, தனது இருக்கையை அடைவதற்குள் கணக்கை சரி செய்து விடுவான். இருக்கையில் உட்காராமல் மீண்டும் ஆசிரியரிடமே ஓடுவான்.

ஆசிரியரோ அவனை மீண்டும் அடித்துத் துவைப்பதற்குத் தயாரான நிலையிலேயே அவனை எதிர்கொள்வார். அவன் மீண்டும் தவறாகக் கணக்கைப் போட்டிருப்பான்.

“முந்திரிக் கொட்டை” என்று திட்டியபடியே அவனை மீண்டும் அடித்துத் துரத்துவார் ஆசிரியர்.

அவன் அந்தக் கணக்கை ஒரு வழியாக சரியாகப் போட்டு முடித்து விடுவான். ஆனால் அதற்குள் எங்களில் பலர் அந்தக் கணக்கைச் சரியாகப் போட்டு முடித்து விடுவோம்.

அவனளவுக்கு எங்களிடம் தன்னம்பிக்கை இல்லாவிட்டாலும், அவனுக்கு முன்னால் எங்களில் பலர் அந்தக் கணக்கைச் சரியாகப் போட்டு முடித்து விட்டோம்.

தன்னம்பிக்கை என்பது ஒரு மோட்டார் வாகனத்தின் ஆக்ஸிலேட்டரைப் போன்றது. அவநம்பிக்கை என்பது அந்த வண்டியிலுள்ள பிரேக்கைப் போன்றது.

**தன்னம்பிக்கை எந்த அளவுக்கு முக்கியமோ அந்த அளவுக்கு அவ நம்பிக்கையும் முக்கியம். அந்நிலையில் தான் நாம் செய்யும் செயலில் ஒரு நிதானம் கிடைக்கும்,**

சிலருக்கு அவநம்பிக்கையை ஏற்படுத்தும் எதிர்மறைச் சிந்தனைகள் தேவைக்கும் அதிகமாக வந்து கொண்டிருக்கும். அவற்றை நிதானப்படுத்துவதற்கும் ஒரு பிரேக் தேவைப்படுகிறது. அங்கு தன்னம்பிக்கைதான் பிரேக்காக இருந்து எதிர்மறைச் சிந்தனைகளை நிதானப்படுத்துகிறது.

நமக்கு எந்த அளவுக்குத் தேவையோ அந்த அளவுக்கு இந்தத் தன்னம்பிக்கையை நாம் ஏற்படுத்திக் கொள்ள வேண்டுமா?

உண்மையில் தன்னம்பிக்கை என்பது என்ன?

நமக்கு ஏற்படும் எத்தனையோ வகையான மன உணர்ச்சிகளுள் இந்தத் தன்னம்பிக்கையும் ஒன்று.

நமக்கு ஏற்படும் அனைத்து மன உணர்ச்சிகளும் தாமாகத் தோன்றுவதில்லை. அவை அனைத்தும் எதிர் விளைவுகளாக Reaction– களாகவே தோன்றுகின்றன.

Reaction-களாக வருபவை அனைத்தும் தாமாகவே மறைந்துவிடும். அவற்றை நிரந்தரப்படுத்துவதும் சாத்தியமில்லை. கடலில் தோன்றும் எந்த அலையையாவது நிரந்தரமாக வைத்துக் காப்பாற்ற முடியுமா?

ஒரு வேலையை உங்களால் செய்து முடித்து விட முடியும் என உங்கள் அறிவு சொல்லும்போது அந்த எண்ணந்தான் உங்களுக்கு தன்னம்பிக்கை என்னும் உணர்ச்சியை – Reaction ஐ உருவாக்குகிறது.

உங்களிடம் ஒரு வேலையை ஒப்படைத்த உடனேயே அதனை வெற்றிகரமாக முடித்துவிடமுடியும் என எப்போதும் உங்கள் அறிவால் கூறி விட முடியுமா?

அந்த வேலையைப் பற்றிய மேம்போக்கான எண்ணத்தின் மூலமாகத்தான், உங்களால் அதனை "முடித்து விட முடியும் அல்லது முடித்துவிட முடியாது." என்று கூறமுடியும். அது ஒரு மேம்போக்கான கருத்தே தவிர, தீர்மானமான முடிவு அல்ல.

எந்தஒரு செயலையும் வெற்றிகரமாக முடிப்பதற்கு நாம் அந்தச் செயலில் முழு மனதோடு ஈடுபட வேண்டும்.

மேம்போக்கான எண்ணங்களைப் புறந்தள்ளிவிட்டு, செய்ய வேண்டிய செயல்களுக்கு மட்டும் முக்கியத்துவம் கொடுப்பதே நாம் செயலைப் புரிந்து கொள்வதாகும்.

மேம்போக்கான எண்ணத்தின் மூலம் ஏற்படும் தன்னம்பிக்கையானது நமது அணுகுமுறையில் ஓர் அலட்சிய மனப்பான்மையை ஏற்படுத்தி விடக்கூடும்.

அதே போல் இத்தகைய மேம்போக்கான எண்ணத்தின் மூலம் ஏற்படும் அவநம்பிக்கைச் சிந்தனைகளும், தேவையற்ற மனக்கலக்கத்தை ஏற்படுத்திவிடக் கூடும்.

மேம்போக்கான சிந்தனைகளை முழுவதுமாகப் புறந்தள்ளுவதே சரியான அணுகுமுறை. அது தன்னம்பிக்கையாக இருந்தாலும்சரி, அவநம்பிக்கையாக இருந்தாலும் சரி, இரண்டையுமே புறந்தள்ளுவதுதான் நாம் செயலை எதிர்கொள்வதற்கான வழி.

அக உணர்ச்சிகளைப் பொறுத்தவரையிலும், நல்லவை - கெட்டவை, உயர்ந்தவை- தாழ்ந்தவை என எவையும் கிடையாது. தம்மளவில் அவை அனைத்தும் தோன்றி மறையும் நிழல் உருவங்களே.

ஆனால் புறச் செயல்களைப் பொறுத்த அளவில் அந்த உணர்ச்சிகளுக்கும் ஒரு பங்கு உள்ளது. புறச் செயல்களுக்கு எந்த அளவுக்குத் தேவையோ அந்த அளவுக்குப் பயன்படுத்திக் கொள்ள வேண்டும்.

செய்யும் செயல்களை தியானமாக - மன ஈடுபாட்டுடன் செய்யும் போது,

தேவையான உணர்ச்சிகளைத் தேவையான அளவுக்குப் பயன்படுத்திக் கொள்ளும் நிதானம் நமக்குக் கிடைத்துவிடுகிறது.

ஆனால் நம்முடைய மன உணர்ச்சிகளுக்கு முக்கியத்துவம் கொடுக்கும் அணுகுமுறை நம்மிடையே காலங்காலமாக இருந்து வருகிறது.

"மனதில் டென்சன் இல்லாமல் இருந்தால் நாம் நமது செயல்களைத் திறம்படச் செய்ய முடியும். மனதில் ஆர்வம், உற்சாகம், அமைதி இருந்தால் நமது செயல்களை வெற்றிகரமாகச் செய்ய முடியும்."

- இப்படி பலவிதமான அணுகுமுறைகளை நம்மையறியாமலேயே நாம் பின்பற்றி வருகிறோம்.

நாம் இது பற்றிய செய்திகளை வேறு ஒரு கட்டுரையில் கூட ஏற்கனவே விவரித்துள்ளோம்.

"ஆர்வம்" என்ற போர்வையில் உணர்ச்சிகள் அனைத்தும் நம்மை ஏமாற்றிவிடும். தன்னம்பிக்கை, அவநம்பிக்கை ஆகிய அனைத்துமே இந்த வகையைச் சேர்ந்தவைதான்.

எந்த உணர்ச்சிகளும் நிரந்தரமானதல்ல. அவற்றை நம்பி செயலில் இறங்கினால் அவை நம் காலை வாரிவிட்டு விடும். இருப்பது போல் இருந்து மறைந்து விடும். மண் குதிரையை நம்பி ஆற்றில் இறங்கினால் ஆறு நம்மை அடித்துச் சென்று விடும்.

நமது கவனத்தையும், ஈடுபாட்டையும், உணர்ச்சிகள் என்னும் **Reaction** களைப் புறக்கணித்து, செயலில் மட்டுமே தாம் காட்ட வேண்டும்.

நமது ஈடுபாடு செயலோடு இருக்கும் போது, நமது ஈடுபாடே நமது செயலுக்குத் தேவையான மன உணர்ச்சிகளை நம்மிடமிருந்து வரவழைத்துவிடும்.

அந்நிலையிலும் கூட நமது ஈடுபாடு நம்மிடம் ஏற்பட்ட உணர்ச்சிகளின் மீது திரும்ப வேண்டிய அவசியம் இல்லை.

உணர்ச்சிகளின் பிடியிலிருந்து விடுபட்டு சுதந்திரமாக இயங்கும் அறிவே எல்லாச் செயல்களுக்கும் நல்லது.

- ஏன், அந்த உணர்ச்சிகளுக்கும் கூட அதுதான் நல்லது.







K.S. ஜீவமணி
செல் : 97891-65555



# கேள்வி? பதில்...

## எல்லோரிடமும் குறை காணும் என்னை மாற்றிக் கொள்வது எப்படி?



**கேள்வி:**

ஐயா வணக்கம், நான் மிகவும் நேர்மையானவன், என்னைச் சுற்றி இருப்பவர்கள் செய்யும் தவறுகளைப் பார்த்தால் உடனே கோபம் வந்து திட்டிவிடுகிறேன். என் செய்கையைப் பார்த்த என் நண்பர் என்னிடம் எல்லோரிடமும் குறை நிறை உண்டு, நீ நிறையை மட்டும் பார் குறைகளைக் காணாதே என்கிறார். மேலும் ஓர் உதாரணத்தையும் கூறினார். அதாவது “ஒரு ரோஜா செடியைப் பார்க்கும் போது இந்த முள் செடியில் அழகான பூ பூத்திருக்கின்றதே எனப் பார்ப்பது ஒரு வகை, இந்தப் பூச்செடியில் இவ்வளவு மோசமான முள் இருக்கின்றதே எனப் பார்ப்பது இன்னொரு வகை, நீ நிறையை மட்டும் பார்க்கக் கற்றுக் கொள்” என்றார். நான் எப்படி நிறையை மட்டும் பார்ப்பது, எனக்கு உடனடியாகத் தெரிவது அவர்களின் குறைதானே. நான் எப்படி என்னை மாற்றிக் கொள்வது?

**பதில்:**

நீங்கள் உங்கள் இயல்பை மாற்ற முயற்சி செய்யாமல் இருப்பதே சரி. ஏனெனில் உங்கள் இயல்பை உங்களால் மாற்ற முடியாது. நாம் பகவத் ஐயா கொடுக்கும் புரிதலின் மூலம் புரிந்து கொள்வதும் இதைத்தான். தன் அகத்தை மாற்ற முடியாது என்பதை புரிந்து கொண்டு அதை அதன் போக்கில் சுதந்திரமாக இயங்குவதற்குத் தடையில்லாமல் இருப்பதே ஞானம்.

உங்களைச் சுற்றியுள்ளவர்கள் தவறு செய்யும் போது உடனே உங்களுக்குக் கோபம் வந்து விடுகிறது. இது நீங்கள் எதிர்கொள்ளும் சூழ்நிலைக்குத் தகுந்த உங்கள் இயல்பில் இருந்து வெளிப்படும் எதிர் விளைவே. எதிர் விளைவுகள் எதுவும் நீங்கள் உருவாக்குவது அல்ல. நமது இயல்புக்குத் தகுந்தவாறு தாமாகத் தோன்றுகிறது. அவை நம் விருப்பு வெறுப்புக்குக் கட்டுப்பட்டவையல்ல. அதே சமயம் அவை எப்படி தாமாக தோன்றியதோ அதே போல் அவை தாமாகவே மறைந்து விடும்.

மனிதர்கள் அனைவருமே குறையுடன் மட்டும் இருப்பதில்லை. நிறை குறை கலந்தே இருக்கிறார்கள். சுற்றியுள்ளவர்கள் செய்யும் தவறுகளால் உங்களுக்குக் கோப உணர்ச்சி தோன்றுகிறது. கோப உணர்ச்சி தோன்றுவதில் சரி, தவறு என்று எதுவும் இல்லை. அதனை வெளிப்படுத்துவதில் மட்டும் நிதானம் இருந்தால் போதும். உங்களுக்கு வந்த கோபம் சரியானது தான் என்று முடிவு செய்து அதை நியாயம் கற்பிக்கும் போது மட்டுமே நீங்கள் உடனே திட்டி விடுகிறீர்கள். கோபத்தை நீங்கள் அங்கீகரிப்பதால் மட்டுமே அதனோடு இணைந்து திட்டிவிடுகிறீர்கள். எதிர்விளைவாகத் தோன்றும் உணர்ச்சிகள் எதுவும் நமக்குக் கட்டுப்பட்டதல்ல என்பதை புரிந்து கொள்ளும் போது புறத்தில் நிதானத்துடன் செயல்படும் தன்மைக்கு வந்துவிடுகிறோம். மற்றவர்கள் செய்யும் தவறுகளுக்கு எல்லா சமயங்களிலும் நீங்கள் திட்டுவதால் தீர்வு கிடைத்து விடாது. அவர்களோடு பிணக்குதான் ஏற்படும். சில இடங்களில் திட்டினால் தான் பிரச்சினை சரியாகும் என்றால் கோபத்தை பயன்படுத்தித் திட்டலாம். மற்ற இடங்களில் நிதானத்துடன் செயல்படுவதே சரி. நமது கவனம் நம் கட்டுப்பாட்டில் இல்லாத உணர்ச்சிகள் பக்கம் திரும்பாமல் நமது புறச்செயலின் பக்கம் திரும்ப வேண்டும். அப்போது நிதானம் தானாக ஏற்படும். நாம் நிதானத்துடன் செயல்படும் போது மட்டுமே சூழ்நிலையை சரியாக எதிர் கொள்ள முடியும்.

அகத்தைப் பொறுத்த வரையில் நிறை, குறை என்று எதுவும் இல்லை. நமக்கு ஏற்படும் எல்லா உணர்ச்சிகளும் இயற்கையே.

புறத்தில் நம்மைச் சுற்றியுள்ளவர்களிடம் பல குறைகள் இருந்த போதும் நாம் நிதானத்துடன் செயல்படும்போது மட்டுமே அவர்களின் குறைகளுக்காகச் சண்டையிடாமல் பக்குவமாக எடுத்துக் கூறி புரிய வைத்து அவர்களையும் நிறைவாகச் செயல்பட வைக்க முடியும்.

**கோபம் – அகம் – தாமாக ஏற்படுவது**

**புறச்செயல் – புறம் – நாமாகச் செய்வது.**





# ஸ்ரீ பகவத் பவன் – புரவலர்கள்

அன்பு உள்ளங்களுக்கு ஓர் அன்பான அழைப்பு,

ஸ்ரீ பகவத் மிஷன் என்பது பணப்புழக்கம் மிகுந்த ஒரு கார்ப்பரேட் நிறுவனம் அல்ல. கட்டணம் வாங்கிக் கொள்ளும் கல்வி நிறுவனமும் அல்ல.

ஐயா அவர்களுக்கு தங்கியிருக்க வீடு ஒன்று தேவைப்பட்டது. நம் அனைவரது ஒத்துழைப்பாலும் **ஸ்ரீ பகவத் பவன்** உருவானது.

தற்போது அந்த இல்லம் ஐயாவின் இருப்பிடமாகவும் கற்றிட வருவோரின் குருகுலமாகவும், நம் அனைவரது பண்ணை வீடாகவும் செயல்பட்டு வருகிறது.

ஜனவரி மாதத்தில் வெளிநாட்டவர்கள் பலர் தங்கிச் சென்றனர். அவர்கள் 100% செலவினங்களை ஏற்றுக்கொண்டனர். உள் நாட்டவர்களைப் பொறுத்த அளவில் 20% பங்களிப்பே உள்ளது. ஸ்ரீ பகவத் பவனின் நித்திய நிர்வாகச் செலவினங்களுக்கான நித்திய நிதி ஒன்றும் தேவைப்படுகிறது.

நிரந்தர வைப்பு நிதி எதனையும் தற்போது உருவாக்க வேண்டாம் என்று ஐயா கூறிவிட்டதால் நிரந்தரப் **புரவலர்** குழு ஒன்றை உருவாக்க முடிவு செய்துள்ளோம்.

முதற்கட்டமாக 100 ஆர்வலர்கள் கொண்ட புரவலர் குழு ஒன்று இம்மாதம் முதல் உருவாக்கப்படுகிறது.

அதன்படி ரூ.1000 முதல் ஏதாவது ஒரு தொகையை மாதந்தோறும் அல்லது ரூ.12000 முதல் ஏதாவது ஒரு தொகையை வருடந்தோறும் வழங்கும் ஆர்வம் உள்ளவர்கள் தங்களை ஸ்ரீ பகவத்பவனின் புரவலர்களாக இணைத்துக் கொள்ளலாம்.

அதற்காக ஏற்றுக்கொண்ட முழுத்தொகையையும் மாதந்தோறும் வழங்கியே ஆகவேண்டும் என்ற நிபந்தனை எதுவும் புரவலர்களுக்குக் கிடையாது.

நமது வேண்டுகோளை ஏற்று பலர் நம் அனைவரின் இல்லமான ஸ்ரீ பகவத் பவனின் நிர்வாகச் செலவுகளை ஏற்றுக் கொள்ளும் புரவலர்களாகப் பொறுப்பேற்க முன் வந்துள்ளார்கள்.

ஸ்ரீ பகவத் பவனின் புரவலர் குழு விபரம்:

1. திரு. **சரவணன்,** புரசைவாக்கம், சென்னை.
2. திரு. **வீரன்சுப்பு** (எ) **இராஜேஸ்,** புதுக்கோட்டை.
3. திரு. **கணேஷ்,** கோவை.
4. திருமதி. **முத்துலட்சுமி சரவணன்,** சென்னை,
5. திரு. **இரகு,** கிருஷ்ணகிரி.
6. திரு. அஃகு ஹீலர். **உமர் ஃபாரூக்,** கம்பம்.
7. திரு. **சேகர்,** கத்தார்.
8. திரு. **குணாலன்,** கோவை .
9. திரு. **சம்பத்,** சென்னை.
10. திரு. **வெங்கட்ராமன்,** சென்னை.
11. திரு. **இராஜகோபால்,** பரமத்தி வேலூர்.
12. திரு. **பாலசுப்ரமணி,** பரமத்தி வேலூர்.
13. திரு. **பாரதிராஜா,** பரமத்தி வேலூர்.
14. திரு. **பாபுலால்,** பெங்களூர்.
15. திரு. **முரளி,** சென்னை.
16. திரு. **வீரப்பன்,** நெல்லை.
17. திரு. **அருணாச்சலம்,** நெல்லை.
18. திருமதி. **நிருபமா ஸ்ரீநாத்,** சென்னை.
19. திருமதி. **வடிவம்மாள்,** சென்னை.
20. திரு. ஹீலர். **சுரேஷ்,** சென்னை.
21. திரு. **ஹரி கிருஷ்ணன்,** சென்னை.

புரவலர்களாக தங்களை இணைத்துக் கொண்ட அனைவருக்கும் ஸ்ரீபகவத் மிஷன் சார்பில் உளமார்ந்த நன்றியையும் பாராட்டுகளையும் தெரிவித்துக் கொள்கிறோம்.

வாய்ப்புள்ளவர்கள் புரவலர்களாக இணைந்து உதவிட வேண்டும்கிறோம்.

வங்கிக் கணக்கில் நேரடியாக செலுத்துபவர்கள் HDFC Bank- Sri Bagavath Mission

A/c No. 15907620000075, NEFT IFSC: HDFC 0001590 Car Street Branch, Salem. என்ற கணக்கில் செலுத்தலாம். Bank A/C ல் நேரடியாக செலுத்தியவர்கள் தகவலை 97891 65555 என்ற எண்ணிற்கு தெரிவிக்க வேண்டுகிறோம்.




சேலம்.



K.S. ஜீவமணி
செல் : 97891-65555



# ஆசிரியர் பகுதி

அனைவருக்கும் சகப் பயணியின் வணக்கம்,

ஆன்மிகத்தில் தேடுதல் கொண்டவர்களின் வாழ்வில் தியானம் என்பது மிகவும் முக்கிய பங்கு வகிக்கிறது. ஞானத் தேடுதல் கொண்டவர்கள் பலர் தியானத்தின் மூலமாகவே ஞானத்தை அடைய முயற்சிக்கிறார்கள்.

ஆன்மிக சாதகர்கள் பெரும்பாலோர் தியானத்தின் மூலமே ஞானம் பெற முடியும் என்று உறுதியாக நம்பி வருகிறார்கள். காரணம் இதுவரை அவர்கள் கேட்டறிந்த கருத்து அவ்வாறு. உண்மையில் ஞானம் என்றால் என்ன என்பதை தெரிந்து கொண்டாலே தியானம் அதற்கு உதவாது என்பது புரிந்துவிடும். மனதின் இயற்கையான இயக்க உண்மையைப் பற்றிய அறிவே ஞானம். எந்த மெய்யை அறிந்து கொண்டால் அக விடுதலையை-முக்தியைப் பெற முடியுமோ அதுவே மெய்ஞ்ஞானம். நமது அறிவின் எல்லையையும் இயலாமையையும் புரிந்து கொள்ளும் அறிவே ஞானம்.

வெளிநாட்டில் வசிக்கும் இலங்கை சகோதரி ஒருவர் என்னிடம் ஒரு கேள்வியை எழுப்பினார்.

நாம் உணர்ச்சி வசப்பட்ட நிலையில் இருக்கும் போதோ பரபரப்பாக இருக்கும் போதா நமது மன அலைச்சுழல் வினாடிக்கு 14 லிருந்து 40 வரை இருப்பதாகவும் இதனை பீட்டா அலை **(Beta Wave)** என்றும் மனம் அமைதியாக இருக்கும்போது ஆல்பா அலைச்சுழலில் **(Alpha Wave)** வினாடிக்கு 8 முதல் 13 வரை இயங்குவதாகவும் குறிப்பிடுகிறார்கள். மனதை அமைதியாக வைத்துக் கொள்ள ஆல்பா தியானம் சொல்லி கொடுக்கிறார்கள். ஆல்பா தியானம் செய்வதால் தவறு ஏதேனும் உள்ளதா?

தியானம் என்பது மனதை ஒழுங்குபடுத்த நாம் எடுக்கும் முயற்சி. விடுதலை என்பது முயற்சியால் வருவதல்ல. நம் மனத்தை இறை நிலையிடம் ஒப்படைக்கும் சரணாகதியால் வருவது. முயற்சியால் ஒருபோதும் விடுதலை ஏற்படாது.

தியானத்தின் மூலம் பல விந்தைகளைக் காணலாம். வித்தைகளைக் காட்டலாம். ஆனால் விடுதலையை அடைய முடியாது. தியானம் ஆரம்ப சாதகர்களுக்கு ஓர் ஆர்வத்தை கொடுக்கும். ஆனால் இதுவே முடிவல்ல. முடிவில்லா முக்தியை (விடுதலையை) அடைவது முடிவு.

முடிவில்லா முக்தியை அடைவது எவ்வாறு? முடிவில்லா முக்திக்கு முடிவும் இல்லை ஆரம்பமும் இல்லை. அது எப்போதுமே இருக்கக் கூடியது தான். அதை அடைவது என்று சொல்வது கூட ஒரு வார்த்தைப் பிழைதான். அது எப்போதும் இருக்கக் கூடியது. நாம் பிறக்கும் போதே விடுதலையோடுதான் பிறக்கிறோம். நமக்கு சமுதாய அறிவு வளர வளர அதே அறிவு நம் அகத்தையும் நிர்வாகம் செய்ய முயற்சி செய்கிறது. இந்த முயற்சிதான் இயற்கையாக இயங்கிக் கொண்டிருக்கக் கூடிய அக விடுதலைக்கு இடையூறு செய்கிறது. இதுவே நம் மனப்பிரச்சினைக்கு காரணமாகிவிடுகிறது. பிரச்சினையிலிருந்து விடுபடவேண்டும் என்பதற்காக நாம் எடுக்கும் முயற்சியே பிரச்சினையைக் கொண்டு வந்து விடுகிறது.

இந்த முயற்சியின் மறு வடிவம்தான் அகத்தைச் சீர் செய்வதற்காக நாம் செய்யும் தியானங்கள்.

ஆனால் இந்த உண்மையைக் கண்டுபிடிப்பதுதான் கொஞ்சம் சிரமம். காரணம் நாம் மனதில் எந்தப் பிரச்சினையும் இல்லாமல் இருக்கும்போது செய்யும் தியானம் நமக்கு மன அமைதியே கொடுக்கும். மனதில் பிரச்சினை என்று வரும்போது நமக்கு கை கொடுக்க வேண்டிய தியானங்கள் காலை வாரி விட்டு விடும். இந்தச் சமயத்தில் நமக்கு என்ன நினைக்க தோன்றும், “நாம் தியானத்தை மேலோட்டமாக செய்துவருகிறோம். அதனால்தான் பிரச்சினை என்று வரும்போது மன அமைதி கெட்டுவிடுகிறது. நாம் இன்னும் தியானங்களை தீவிரமாகவும் ஆழமாகவும் பயிற்சி செய்ய வேண்டும்.” என்ற தவறான முடிவுக்கு வந்து விடுகிறோம்.

உண்மையில் அக உணர்வுகளும் எண்ணங்களும் கணத்துக்கு கணம் மாறிக்கொண்டே இருக்கிறது. தியானம் செய்யும்போது அகத்தில் உள்ள **நான்** வேறு. பிரச்சினையில் இருக்கும் போது அகத்தில் உள்ள **நான்** வேறு. பிரச்சினையில் இருக்கும் **நான்,** தியானத்தில் இருக்கும் **நான்**-ஐ உதவிக்கு அழைத்தால் கண்டிப்பாக வராது. நமக்கு ஏற்படும் அனுபவத்திற்கு தகுந்த அனுபவிப்பானாகிய **நான்** மாறிக் கொண்டே இருக்கும். இது இயற்கை.

நமக்கு ஏற்படும் உணர்வுகளும், எண்ணங்களும் நாம் எதிர்கொள்ளும் சூழ்நிலைகளுக்கு ஏற்ப இயந்திரகதியாகத் தாமாகத் தோன்றுவது. அவை எந்த அலைச்சுழலை வேண்டுமானாலும் ஏற்படுத்தட்டும். அவை பீட்டாவாக **(Beta Wave)** இருந்தாலும் சரி ஆல்பாவாக **(Alpha Wave)** இருந்தாலும் சரி. புறச் செயலுக்கு தேவை என்றால் அதனை தூண்டுகோலாக எடுத்துக்கொள்ளலாம். தேவைப்படாத பட்சத்தில் அந்த உணர்வுகளையோ எண்ணங்களையோ கண்டு கொள்ளத் தேவையில்லை. இங்கு கண்டு கொள்ளத் தேவையில்லை என்பது அப்படித் தோன்றும் எண்ணங்களும் உணர்வுகளும் இயற்கையானவை என்பதைப் புரிந்து கொண்டு அதனோடு முரண்படாமல் சும்மா இருப்பதாகும்.

இயற்கையாகவே தோன்றி மறைந்து கொண்டிருக்கக்கூடிய அனுபவங்களை நாம் மாற்ற நினைக்கும் போது தான் இயற்கையாகவே இயங்கும் விடுதலையில் இடையூறும் முரண்பாடும் வந்து விடுகிறது.

இந்த இயற்கை இயக்கத்தைப் புரிந்து கொண்டால் நமக்கு அகத்தில் எதுவும் இல்லை என்பதைக் கண்டு பிடித்து விடுவோம்-இந்தக் கண்டுபிடிப்பே ஞானம்.

இந்த கண்டுபிடிப்பே விடுதலைக்கு எதிரான நமது இடையூறையும் முரண்பாட்டையும் நிறுத்தி விடும். இதை

விடுத்து எவ்வளவு காலம் நாம் தீவிரமாகவும் ஆழமாகவும் தியானம் செய்தாலும் பல அதீத அனுபவங்கள் ஏற்படுமே தவிர விடுதலை ஏற்படாது.

புறக்காரியங்களை மனம் ஒன்று தியானமாகச் செய்யலாம். அல்லது கண்மூடி தளர்வாக எந்த நோக்கமுமின்றிப் பொழுது போக்காகச் செய்யலாம்.

நம் மன உணர்வுகளை மாற்றவோ எண்ணங்களை மாற்றவோ முக்தியை அடையவோ செய்யும் தியானங்கள் ஏற்கனவே கணத்துக்கு கணம் மாறி விடுதலையோடு இயங்கிக் கொண்டிருக்கும் மனத்திற்கே எதிராக செயல்படுவதாகும்.

தன்னை அறிந்திடில் தனக்கொரு கேடில்லை என்பது போல தன் அகத்தை ஐயம்திரிபற அறிந்து கொண்டால் ஏற்கனவே இயங்கிக் கொண்டிருக்கும் அக விடுதலையோடு முரண்படமாட்டோம்.

இதுவே தன்னை அறியும் ஞானமாக விளக்கப்படுவது.

இவ்வளவு காலம் புரியாதப் புதிராக இருந்த நம் அகத்தினை எளிமையாகப் புரிய வைத்து நம்மையும் ஞானியாக்கி வருகிறார் நமது பகவத் ஐயா அவர்கள்.

அந்த வகையில் 28ஆம் தேதி முதல் மே 1ஆம் தேதி வரை 4 நாள் ஞானமுகாம் சேலம் ஏற்காட்டில் மிகச் சிறப்பாக நடைபெற்றது. இதில் சென்னை, பெங்களூர் மற்றும் பல ஊர்களில் இருந்து புதிய அன்பர்கள் பலர் கலந்து கொண்டனர்.

ஞானத் தெளிவு பற்றிய ஐயாவின் புதிய அணுகுமுறை அவர்களுக்கு மிகவும் பயனுள்ளதாகவும் நிறைவை தருவதாகவும் அமைந்திருந்தது. கோடையை குளிர்ச்சியாகக் கொண்டாடும் வகையில் பலர் குடும்பத்துடனும் குழந்தைகளுடனும் கலந்து கொண்டனர். மேலும் இந்த ஞான முகாமில் ஹீலர் **உமர் ஃபாரூக்** அவர்கள் 30-ந் தேதி மாலை மனச் சமநிலை, உடற் சமநிலை பற்றி ஒரு சிறப்புரை நிகழ்த்தினார்கள். இது மிகவும் பயனுள்ள வகையில் அமைந்திருந்தது. ஞானமுகாம் சிறப்பாக நடைபெற உதவிய நமது ஸ்ரீ பகவத் மிஷன் குடும்ப உறுப்பினர்கள் பெங்களூர் திரு. **பாபுலால்** ஐயா, சேலம் திரு. **மனோகர் ராஜா** குடும்பத்தினர், சேலம் திரு. **ராஜேஸ்,** சென்னை திரு. **ராம்லால்** ஆகிய அனைவருக்கும் நம் அனைவரின் சார்பாக உளமார்ந்த நன்றியையும் பாராட்டுகளையும் தெரிவித்துக் கொள்கிறோம்.

ஐயா வழங்கும் ஞானப்புரிதலால் பயன் பெற்றவர்கள் பலர். அவர்களுக்கு ஒரு வேண்டுகோள்.

இந்த மெய்ஞானத் தெளிவை உலகெங்கும் உள்ள தேடுதல் கொண்டவர்களுக்கு எடுத்துச் செல்லும் ஸ்ரீ பகவத் மிஷனின் தன்னலமற்ற பணியில் தங்களையும் இணைத்துக் கொள்ள வேண்டுகிறோம்.

ஞானத் தெளிவு பெறுவோம். பெற்ற தெளிவை பகர்வோம்.

# ஸ்ரீ பகவத் பவன்

ஸ்ரீ பகவத் மிஷன் குடும்ப உறுப்பினர்களுக்கு வணக்கம்,

ஏற்காடு ஞானமுகாமைத் தொடர்ந்து மே மாதம் 6 மற்றும் 7 ஆம் தேதிகளில் மயிலாடுதுறையில் ஓர் ஞானமுகாம் கட்டணமின்றி இலவசமாக நடைபெற உள்ளது. இதனை மயிலாடுதுறையில் சத்சங்கம் நடத்தி வரும் நமது பகவத் மிஷன் குடும்ப உறுப்பினர்கள் **திரு.இராஜவேல்,** திரு. **கார்த்திக்,** திரு. **சீத்தல்குமார்,** திரு. **முத்துச்செல்வன்** ஆகியோர் சிறப்பாக ஏற்பாடு செய்துள்ளனர். அவர்களுக்கு உளமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

மயிலாடுதுறையில் நடைபெறும் ஞானமுகாமைத் தொடர்ந்து ஸ்ரீ பகவத் ஐயா அவர்கள் திருச்செந்தூர் செல்ல இருக்கிறார்கள். மேலும் மே மாதம் 13ம் தேதிக்குள் மீண்டும் ஸ்ரீ பகவத் பவன் வர இருக்கிறார்கள். அது சமயம் விருப்பமுள்ளவர்கள் வந்து தங்கி ஐயாவை சந்தித்து உரையாடிச் செல்லலாம். இங்கு வருபவர்களுக்கு தங்குவதற்கான வசதியும் உணவும் ஏற்பாடு செய்யப்பட்டு வருகிறது.

மேலும் ஸ்ரீ பகவத் மிஷன் வளர்ச்சிப் பணிக்காக இன்னும் 62 நிறுவனர்கள் **(Founders)** தேவைப்படும் நிலையில் ரூபாய்.25000/- நன்கொடையாக வழங்கி ஸ்ரீ பகவத் பவனின் நிறுவனர்களாக **(Founders)** இணைத்து கொண்ட

திரு. **வேலுசாமி,** கோவை.
திரு. **முருகேசன்,** பெங்களூர்
திரு. **காளத்தி,** திருநின்றவூர்
திரு. **பாபு,** வேலூர்
திரு. **Arul Jerald Arulsamy Javis,** துபாய்
திரு. **ஸ்ரீனிவாசன்,** ஆற்காடு
திரு. **குமார்,** காட்பாடி
திரு. **தர்மராஜ்,** கல்பாக்கம்

ஆகிய அனைவருக்கும் ஸ்ரீ பகவத் மிஷன் சார்பில் உளமார்ந்த நன்றியைத் தெரிவத்துக்கொள்கிறோம்.

மேலும் நம் அனைவரின் இல்லமான ஸ்ரீ பகவத் பவனின் தேவை அறிந்து **Fridge**-ம் (குளிர்சாதனப் பெட்டி) ஐயாவின் தேவை அறிந்து ஒரு **Washing Machine**-ம் நன்கொடையாக வழங்கிய நமது அன்பர் Smt. **MANGALA GOWRI,** Hydrabad அவர்களுக்கு உளமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

மேலும் நமது ஸ்ரீ பகவத் பவன் ஜருகுமலை அடிவாரத்தில் அமைந்திருப்பதாலும் சுற்றிலும் மலைகள் சூழ்ந்திருப்பதாலும் இன்டர்நெட் கனெக்சன் கிடைக்காமல் இருந்தது. பகவத் ஐயாவுடன் **google hangouts** மூலம் சத்சங்கம் நடத்துவதற்கும் வரும் அன்பர்களின் வசதிக்காகவும் தனியாக **Tower** அமைக்கப்பட்டு அதிவேக **(Hi Speed)** இன்டர்நெட் கனெக்சன் பகவத் பவனுக்கு பெறப்பட்டுள்ளது. அதற்கான செலவுகளில் பங்கெடுத்துக் கொண்ட திருமதி. **முத்துலட்சுமி சரவணன்** அவர்களுக்கு உளமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

நன்றியுடன், ஸ்ரீ பகவத் மிஷன், சேலம்.



ஏற்காடு ஞான முகாமில் ஐயாவின் வருகை...



ஐயாவுடன் ஸ்ரீ பகவத் பவன் நிறுவனர் தர்மராஜ் குடும்பத்தினர்




ஸ்ரீ பகவத் பவனில் ஐயாவுடன் அன்பர்கள்



ஏற்காடு ஞான முகாமில் ஐயாவுடன் ஸ்ரீ பகவத் பவன் நிறுவனர் திரு. ஸ்ரீனிவாசன்



ஏற்காடு ஞான முகாமில் ஐயாவுடன் ஸ்ரீ பகவத் பவன் நிறுவனர் திரு. முருகேசன்



ஏற்காடு ஞான முகாமில் கிருஸ்துவ சகோதரிகளை பெங்களூரு திரு. பாபுலால் ஐயா கௌரவிக்கும் போது...

# நிகழ்ச்சி நிழல்கள்



ஏற்காடு ஞான முகாமில் ஐயாவுடன் கலந்துரையாடல்...



ஸ்ரீ பகவத் பவன் நிறுவனர் திரு. பாபு அவர்கள் சமையல் கலைஞரை கௌரவிக்கும் போது...



ஏற்காடு ஞான முகாமில் ஹீலர் உமர் ஃபாரூக் அவர்கள்



ஐயாவுடன் ஸ்ரீ பகவத் பவன் நிறுவனர் திரு. காளத்தி அவர்கள்



ஸ்ரீ பகவத் பவன் நிறுவனர் திரு. குமார் அவர்கள் சமையல் கலைஞரை கௌரவிக்கும் போது...



ஏற்காடு ஞான முகாமில் திரு. மோகன் ராம் அவர்கள் சமையல் கலைஞர் குமாருக்கு நன்கொடை வழங்கும் போது...

# ஜென் கதை

# மாற்றி யோசி

இளைஞன் ஒருவன் மனக்கொதிப்பிலிருந்து விடுபட்டு மனஅமைதி அடைவதற்காகக் கடுமையாக முயற்சி செய்து வந்தான். தீவிரமாக தியானத்தில் ஈடுபட்டான். தியான நேரம் போக மற்ற நேரங்களில் மனக்கொதிப்பே மிஞ்சியது. என்ன செய்வது என்று தெரியாமல் தடுமாறிப்போனான். இறுதியாக ஒரு ஞானியைச் சந்தித்து தன்னுடைய மனக்கொதிப்பிலிருந்து விடுபட்டு மனஅமைதி அடைவதற்கான வழிமுறைகளை கேட்டான்.

"மனதில் தோன்றும் எந்த உணர்வையும் நம்மால் மாற்ற முடியாது" என்றார் ஞானி.

"சாமி, நான் மனக்கொதிப்பை பற்றி கேட்கிறேன்" என்றான்.

''மனக்கொதிப்பும் மனதிலிருந்து தானே வெளிப்படுகிறது" என்றார் ஞானி.

"சாமி, எனக்கு புரியவில்லை, எளிமையாக புரியும் படி கூறுங்கள்" என்றான்.

"கண்ணாடியில் தெரியும் உன் பிரதிபிம்பத்தை மாற்ற எதுவும் செய்யத் தேவையில்லை. எத்தனை முறை முயன்றாலும் தோல்வியே மிஞ்சும்" என்றார் ஞானி.

இளைஞன் வீடு திரும்பினான். முகத்தில் மூன்று தளும்புகளுடன் இருக்கும் அவன் தன் அழகை காண ஒரு கண்ணாடியில் தன் முகத்தைப் பார்த்தான். கண்ணாடியில் அவனது முகத்தில் இருக்கும் தழும்புகள் மிகவும் தெளிவாக பிரதிபலித்தது. தன் முகம் பார்ப்பதற்கு அவலட்சணமாக இருப்பதாக உணர்ந்தான். தன்னை அழகுபடுத்திக் கொள்ள ஏதாவது வழி இருக்குமா? என்று சிந்தித்தான். கண்ணாடியில் தெரியும் பிரதிபிம்பமான முகத்தில் திலகம் கூட இல்லாமல் பாழும் நெற்றியாக இருப்பது தான் காரணம் என்று ஒரு முடிவுக்கு வந்தான்.

தன்னை அழகுபடுத்திக் கொள்ளும் எண்ணத்தில் கண்ணாடியில் தெரியும் பிரதிபிம்ப முகத்திற்கு புருவம் மத்தியில் குங்குமம் வைத்தான். அப்படி குங்குமம் வைக்கும் போது, அவன் தலை சிறிது அசைந்தது, அதனால் குங்குமம் வைத்த இடம் நெற்றியை விட்டு தள்ளிப்போனது. உடனே கண்ணாடியில் தெரியும் பிரதிபிம்ப முகத்தின் நெற்றியில் இருந்த குங்குமத்தை சரி செய்வதற்கு முயன்றான். மீண்டும் தோல்வியே அடைந்தான். இப்படி பலமுறை தோல்வியடைந்த பிறகு, கண்ணாடியில் தெரியும் அவனது உருவத்தை நேரடியாக அழகு படுத்த முடியாது என்பது அவனுக்கும் புரிந்தது. பிறகு கண்ணாடியில் தெரியும் அவனது உருவத்தை பார்த்து கண்ணாடிக்கு எதிரில் இருக்கும் அவனுடைய நிஜ முகத்தின் நெற்றியில் குங்குமம் இட்டுக் கொண்டான். என்ன ஆச்சரியம் உடனே கண்ணாடியில் தெரியும் அவனது பிரதிபிம்பத்திலும் குங்குமம் அவன் நினைத்தப்படியே சரியான இடத்தில் பிரதிபலித்தது. தன் முகம் லட்சனமாக இருப்பதற்கு கண்ணாடியில் தெரியும் பிரதிபிம்பத்தில் எந்த வேலையும் செய்யத் தேவையில்லை. செய்ய வேண்டியது எல்லாம் தன்னுடைய நிஜமான முகத்திற்கு தான் என்பதை புரிந்துகொண்டு மனஅமைதி அடைந்தான்.

இந்தக் கதையிலிருந்து நாம் என்ன தெரிந்து கொள்கிறோம்.

**கண்ணாடி–மனம். பிரதிபிம்பம்–மனதில் தோன்றும் எண்ணம், உணர்வு. பிரதிபிம்பத்தை சரி செய்யும் முயற்சி–மனதில் தோன்றும் எண்ண உணர்வுகளை சரி செய்யும் முயற்சி. கண்ணாடியில் தோன்றும் பிரதி பிம்பத்தைப் பார்த்து நிஜ உருவத்தில் செய்யும் மாற்றம் – மனதில் தோன்றும் உணர்வுகளையும் எண்ணங்களையும் புறக் காரியத்திற்குப் பயன்படுத்துவது.**

கண்ணாடியில் தெரியும் பிரதிபிம்பத்தை ஒருபோதும் மாற்றவோ, சரி செய்யவோ முடியாது. அதுபோல் மனதில் தோன்றும் எண்ணம், உணர்வுகளை ஒருபோதும் நம்மால் மாற்றவோ, சரி செய்யவோ முடியாது, இது முழுக்க அகம் சம்பந்தப்பட்டது. இங்கு நமக்கு எந்த வேலையும் கிடையாது என்பதை புரிந்து கொள்ள வேண்டும். இது தான் மனதை கொண்டு மனதை சரி செய்ய முடியாது என்பது ஆகும்.

கண்ணாடியில் தெரியும் பிரதிபிம்பத்தை பார்த்து நமது நிஜ உருவத்திற்காக நாம் செய்து கொள்ளும் மாற்றம் தான் உண்மையான மாற்றம். மனதில் தோன்றும் எண்ணம், உணர்வுகளை புறத்தேவைகளை நிறைவு செய்வதற்காக நாம் எடுத்து செயல்படும் போது தான் உண்மையான மாற்றம் ஏற்படும்.



**Registration Number of the News Paper TNTAM/2014/57698 Postal Registration Number : TN/WR/SLM(E)/22/2015-2017**

Published by Shri. V. A. P. Sharavanan on behalf of the Sri Bagavath Mission, 31, Ramalingasamy Street, Ammapet, Salem-636 003. Tamilnadu, India.
Printed by Shri. R. Jayavel at Sree Jayavel Press, 08/11, Gandhi Maidanam, Ammapettai, Salem-636 003.
Editor : Shri. K. S. Jeevamani, Cell : 97891-65555